13th August 1960]

(ஆ) அப்படியானால், என்னென்ன ரசாயனத் தொழிற் சாலைகள், எங்கெங்கே ஏற்படுத்தப்படும்?

(இ) அவை ஒவ்வொன்றையும் நிறுவுவதற்கு செலவாகும் தொகை எவ்வளவு?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) There is no proposal to set up a chemical industry in the public sector.

(b) & (c) Do not arise.

SRI P. G. MANICKAM : வேதாரண்யம் பிராந்தியத்தில் ஜிப்ஸம், சல்பேட், க்ளோரைட், காஸ்டிக் சோடா போன்ற தாதுப் பொருள்கள் ஏராளமாக இருக்கின்றன என்று ஒரு கம்பெனி ஆராய்ச்சி செய்து, சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறதா? இதற்கு மூன்று கோடி ரூபாய் செலவாகும் என்றும், ஆண்டுதோறும் மூன்று கோடி பெருமானமுள்ள மேற்கண்ட தாதுப் பொருள்கள் கிடைக்குமென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறதா? இதுபற்றி பரிசீலனை செய்யப்படுமா?

THE HON SRI R. VENKATARAMAN : அந்தக் கம்பெனியே இதைச் செய்தால் சர்க்கார் வரவேற்கும், உதவி கொடுக்கும்.

*'Kalnar' (asbestos) factory*

* 157 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether there is any proposal to start a 'Kalnar' (asbestos) factory in North Arcot district; and

(b) if so, when?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir.

(b) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : வட ஆற்காடு ஜில்லாவில் ஆம்பூருக்கு அருகிலுள்ள மலையில் கல்நார் உற்பத்தி செய்யக்கூடிய தாதுப் பொருள் இருப்பதாகச் சர்க்காருக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறதா? அப்படியானால், அந்த இடத்தில் கல்நார் தொழிற் சாலையை ஏற்படுத்துவதற்கு சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்தவிதமான தகவல் சர்க்காரிடம் இல்லை. டாக்டர் கிருஷ்ணன் அவர்கள் எழுதிய "Geological Survey" பிரகாரம் சேலம், நீலகிரி, கோயம்புத்தூர் போன்றவிடங்களில் இருப்பதாகத்தான் தகவல் இருக்கிறது.

*House-building Schemes*

* 158 Q.—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வீடு கட்டும் திட்டங்களை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரு ஸ்தாபனத்தின் கீழ் இயங்குவதற்கான திட்டம் எப்போதிலிருந்து அமுலுக்கு வரும்?